# *Tan̲avaiciya ūl̲iyan̲*

## *Malar 3, ital̲ 32*

## *April 27, 1923*

Record no. 148

உ
சிவமயம்.

சென்னை பதிவு எண் ௧௫௦௯ — தந்திவிலாசம்:—"Ooliar"

# தனவைசிய ஊழியன்

தனவைசிய ஊழியர் சங்கத்தினின்றும்
வெள்ளி தோறும் வெளிவருவது.

ஆசிரியன்:— ராய. சொக்கலிங்கம்.

குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்.—திருக்குறள்.

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்.—திருக்குறள்.

மலர் ௩. காரைக்குடி ருத்ரோத்காரி ஹு சித்திரைமீ ௧௫உ (௨௭—௪—௧௯௨௩) இதழ் ௧௨.

## காகிதத் தொழில்.

### காகிதத்தின் வரலாறு.

மனித நாகரிகத்தின் தோற்றம் முதலே, மனிதன் எழுதுவதற்கு ஆரம்பித்துவிட்டான். மனிதன் தனது எண்ணங்களை அதிகமாகவோ சுருக்கமாகவோ சேமித்து வைக்க ஆரம்பித்தது முதல் மனித நாகரிகம் விருத்தியடைந்து வருகின்றதென்பது உண்மையேயாம். வேதம் முதல் இன்றைய நூல் அளவும் எல்லா வகையான கிரந்தங்களும் மனிதநாகரிகத்தின்—மனித எண்ணங்களின்—மனித அநுபவங்களின் சேமப் பொருள்களன்றோ? அவன் அவற்றைத் தன்பயன் கருதிச் சேமித்து வைத்திருப்பினும் பிறர் பயன் கருதிச் சேமித்து வைத்திருப்பினும், அவை பிற்காலத்தவர்க்குச் சேமதனங்களாகவே கருதப்படுகின்றன.

வேதம் (ஆரியவேதம்) கர்ணபரம்பரையிற் சேமித்து வைக்கப்பட்டதாகச் சொல்லப்படுகின்றது. அந்த வேதத்திலும் உயர்ந்த மனித நாகரிகங்கள் ஒளிருகின்றன. கருத்துக்களைச் சேமித்து வைத்தல் வேண்டுமென்று கருதுவார்க்கு, அதற்குத் தக்க உபாயம் தோன்றுவதும் அந்த உபாயத்தைப் பெருக்குவதும் அந்த வேலையைச் சுலபமாக்கிப் பரப்புவதும் இயற்கையேயன்றோ? ஆகலின், ஆதியில், இத்தகைச் சேமோபாயம், குகைகளிலும் பிராணி யெலும்புகளிலும் சுவர்களிலும் செதுக்குருவங்கள் மூலமாகவும் எழுது சித்திரங்கள் மூலமாகவும் சேமிக்கப்பட்டிருந்தன.

இப்படியே பல நாட்களிருந்து, மெதுவாக அந்தச் சேமிப்பு நாகரிகம் இப்போதைய எழுத்துநவ அளவுக்கு வந்து சேர்ந்திருக்கின்றது. எழுதும் எழுத்துமுறை ஆரம்பிக்கப்பட்ட பிறகு, எந்த ஆயுதத்தால், எந்த ஸாதனத்தில் எழுதினால் கஷ்டப்படாமல் சுலபசாத்தியமாகுமென்னும் விஷய ஆராய்ச்சி மெதுவாக மெதுவாகவே செய்யப்பட்டு வந்திருக்கின்றது. எலும்புகள் எலும்புத் துண்டுகளிலிருந்து வரவர மண்தட்டங்களும் மண்ணோடுகளும் ஸாதனங்களாகக் கொள்ளப்பட்டன. இச்சாதனங்களும் கஷ்ட சாத்தியமாகவும் அநாகரிகமாகவும் தோற்றப்பட்டகாரணம் பற்றி, மனிதனுடைய அதிதீவிர புத்தியானது இன்னும் சுலபமான ஸாதனத்தைத் தேட முயன்றது.

இந்நிலைமையில், எகிப்தியர் பேபிரஸ் என்பதிலிருந்து ஒரு வகையான கூழைத் தயாரித்து அதனை ஸாதனமாக்கிக்கொண்டார்கள். இதிலிருந்துதான் தற்காலம் ஆங்கிலத்தில் "பேபர்" என்று சொல்லப்பெறும் வார்த்தை வந்திருக்கலாமென்பது ஊஹிக்கப்படுகிறது. இந்தியாவில் பூர்ஜ மரத்தின் பட்டையையும் பனை மரத்தின் தாளையும் ஸாதனங்களாக உபயோகிக்க ஆரம்பித்தனர். மற்றைய இடங்களில், தோலின்மேல் எழுத ஆரம்பித்தனர். கடினமாக இருந்ததால், அதனை நீரில் ஊறவைத்து அடித்துப் பதமாக்கி பின் எழுத ஆரம்பித்தனர். இவைகளில் ஒன்றாவது முற்றிலும் நாகரிகப்பட்டுவிட்டதாகத் திருப்தியடைய இடமில்லாமலிருந்தது. கூழ் பட்டையும் இலையும் தோலும் கஷ்டசாத்யமாகவே இருந்தன. ஆகலான், ஆராய்ச்சி முயற்சியில், தற்போது நடைபெறும் காகித ஸாதனம் கைக்கொள்ளப் பட்டிருக்கின்றது.

தற்போதுள்ள காகிதஸாதனத்தின் வரலாறு மயக்கமாக இருப்பதானாலும், பழைய நாகரிகத்துக்கேற்றஸாதனவகைகளெல்லாந் தோன்றியதற் கிருப்பிடமான, சீனாவிலிருந்தே இந்தஸாதனமும்தோற்ற ஆரம்பத்தையுடையதாகத் தெரிகின்றது. ஆனால், அது எந்தக் காலத்தில் தோன்றிற்று என்பதை நிர்ணயமாக எம்மாற் சொல்ல இயலவில்லை. தற்போதைய காகித ஸாதன ஆராய்ச்சியை, சீனத்திலிருக்கும் வித்யா மண்டலம் சிறிது விளக்குவதாகத் தெரிகிறது. தேரோடு என்னும் சீன சக்கரவர்த்தியின் கீழ் அமர்ந்திருந்த சீ-யாங் ஸ்தலவாசியான த்ஸாய்-லூன் என்பவன் தான் முதன் முதல் பட்டையிலிருந்து காகிதவகைச்சாதனத்தைக் கண்டு பிடித்தானென்றும் அவனே பழைய துணிகளிலிருந்தும் மீன்களிலிருந்தும் காகிதங்களையுண்டாக்கினான் என்றும் அந்த வித்யாமண்டலம் சொல்கிறது. அவனுடைய காலம் கி. பி. ௧௦௫.

கி. பி. ௭௫௧-ல் ஸாமர்க்கந்தில் வசித்திருந்த அராபியர்கள் சீனர்களால் தாக்கப்பட்டார்கள். அந்த அராபிகளின் தலைவன், வீரனானதால், சீனர்களை முறியடித்துச் சில சீனர்களைச் சிறைபிடித்தான். சிறைபிடிக்கப் பட்டவர்களிற் சில சீனர் காகிதத் தொழிலாளர்களாக இருந்தபடியால், அவர்களிடமிருந்து அத்தொழிலை அரபிகள் கற்றுக் கொண்டார்கள்.

ஐரோப்பாவில், இக்காகிதத் தொழிற்சாலை, ௧௨-ம் நூற்றாண்டின் மத்திய காலத்தில், ஸ்பெயின் தேசவாஸிகளாகிய மூர் ஜாதியாரால் ஸ்தாபிக்கப்பட்டது. இந்த மூர் ஜாதியார் மகம்மதிய மதத்தினர் போலும்.

இந்தியாவில் இத்தகைய காகிதத் தொழில் எப்போது ஆரம்பிக்கப்பட்டது என்று சொல்வது நிர்ணயமில்லாமலிருக்கின்றது. ஆனால், அக்பர் சக்கரவர்த்தி காலத்தில் காச்மீரப் பள்ளத்தாக்குகளில் இத் தொழில் உண்டாக்கப்பட்டதாக இதுவரையில் கிடைத்துள்ள முதல் ஆதாரம் கூறுகிறது. ஆனால், காகிதத் தொழில், இன்னும் முற்பட்ட காலத்திலேயே இந்தியாவில் ஆரம்பிக்கப் பட்டிருத்தல் வேண்டுமென்பது மாத்திரம் உண்மையாகத் தெரிகின்றது. இந்தியாவின் வட தேசவாசிகளாகிய நேபாள தேசத்தார், கீழ் இமயத்தின் வழியாக இந்தியாவுக்கு வந்துகொண்டிருந்த சீன யாத்திரிகள் மூலம் வெகு காலங்கட்கு முன்பே இத் தொழிலைக் கற்றிருத்தல்

## வாழ்க்கையின் வெற்றியும் தோல்வியும்.

மனித வாழ்க்கையை ஒருநேர்த்தியான கொல்லுலைபாக வர்ணிக்கலாம்; அதில், ஆத்மாவானது பரிசுத்தப் படுத்தப்படுகிறது. இவ்வதிசயத்தை யௌவனபருவத்திலும் வார்த்திகப் பருவத்திலும் முறையே காணலாம். வார்த்திகம் அல்லது கிழப்பருவம் வாழ்வாகிய ஏற்றத்துச்சியாக விளங்குகிறது; அதன் அநுபவத்துக்காக யௌவனம் அல்லது இளமைப்பருவம் உழைத்துவருகிறது. கிழப்பருவம் மரணத்துக்காகத் தயாரித்துவைக்கிறது. இளமைப் பருவம் சிறிதேனும் இளைப்பாறுதலைகொள்ளாமல், உழைத்துவருகின்றதாயினும், பெரும்பாலும் நல்ல உறுதியைத்தரக்கூடிய நல்ல பழக்கத்தைச் செய்துகொள்ளாமல், நீடித்த-பயன்தராத விஷயங்களில் ஈடுபட்டு உழைத்துக் கொண்டிருக்கிறது; ஆகவே, இளமையானது, உலகப் பொருள்களில் மாத்திரம் அநுபவத்தை யதிகமாகக் கொள்கிறதென்று சொல்லிவிடலாம். இதுதான் மனிதவாழ்க்கையின் முயற்சிக்காலம் அல்லது பிரயத்தன பருவமாகும். கிழப்பருவமும் அதற்கேற்ற முயற்சிகளையுடையதாகத் தானிருக்கின்றது; ஆனால், இளமைப் பருவத்தைக் காட்டிலும் மேலான பயன்தரக்கூடிய விஷயங்களில் ஈடுபட்டு உழைத்துக்கொண்டிருக்கின்றது. இதனை சூரியாஸ்தமனத்துக்கு முன் தோன்றக் கூடிய அழகிய—பிரகாசமான வர்ணத் தோற்றத்துக்கு ஒப்பிடலாம். இப்பருவம் (கிழப்பருவம்) இளமைப் பருவப் பழக்கங்களின் பிரயோஜனத்தை யுணர்ந்து கொள்ளக்கூடிய தன்மையைப் பெற்றிருக்கின்றது. ஆரம்ப வாழ்க்கையின் பிரதிபலனத்தைப் பெறுதற்கும்—தனது ஆரம்ப வாழ்வின் காரியங்களைப் பற்றிச் சிந்தித்தற்கும்—கடவுளின் தொழில்களை யுணர்ந்து கொள்ளற்கும் ஏற்ற பருவமென்று கிழப்பருவத்தைச் சொல்லிவிடலாம். இதனால், அடுத்த வாழ்க்கையைப்பெறும் நல்லதாக்கிக் கொள்ளற்கே இக்கிழப்பருவம் உழைக்கின்றதென்றும் தெரிகிறது. ஆக, இளமை முதுமைக்கும் முதுமை மரணத்துக்கும் ஸாதனங்களைத் தயாரிக்கின்றது என்பது வெளியாகிறது. இக்குறிப்பிலிருந்துநோக்கினால், மனிதப் பிறவி, மற்றைய விலங்கின் பிறவியிலிருந்து வேற்றுமைப்பட்டதாகவே உறுதியாகிறது. விலங்குகள் தீமைக்குள்ளேயே வாழ்க்கையை முடித்துவிடுகின்றன. அவைகட்கு, அத்தற்போதைய உண்ணலுறங்கற் பெருக்கலாகிய சிற்றின்ப நுகர்ச்சியே ஸாதனமாகத் தோன்றுகின்றது; அதற்குமேல் வேறொன்று இருப்பதாக நினைக்கின்றனவென்று அறியக்கூடவில்லை. அவற்றிலே—சிற்றின்ப நுகர்ச்சிகளிலே, அவைகள் சந்தோஷமடைகின்றனவாகலின், அவற்றோடு திருப்தியடைந்துவிடுகின்றன. ஆனால், தெய்வ ஸம்பந்தமுடைய மனிதப் பிறவி இதற்கு முற்றிலும் மாறுபட்டதாக ஆகிறது. ஒரு உண்மை மனிதன்—முற்றிலும் வெற்றியடைந்த—விலங்காயிருப்பதைக் காட்டிலும், தோல்வியேயுடைய மனிதப் பிறவியே மேலெனக் கருதுகின்றான்.

இவ்வாறே பிறப்பில் மனிதன் பரிசுத்தத்தையடையவிரும்பினால், மனிதன் கற்றல் வேண்டும்; தெரிதல் வேண்டும்; ஆராய்தல் வேண்டும்; நன்மையைத் தேடல் வேண்டும். இதற்காகவே, இவனுக்கு வாழ்வில் பல படிகள் கொடுக்கப் பட்டிருக்கின்றன. ஆனால், அநுபவம் அநேக தடைகளைத் தந்துகொண்டிருக்கின்றது. நமது வளர்ச்சிக்கு முதற்றடையாயிருப்பது நமது தேகந்தான். தேகம் விரும்பிய அற்ப விஷயங்களிலும், ஆத்மா ஈடுபட்டிருக்குமாயின், ஆத்மா ஏற்றமடையாமல் தாழ்வைத்தானடைகின்றது. ஆத்மா தேகத்துக்குள் அடங்கியிருப்பதாகையால், சாதாரண உலக விஷயங்கள் அதை இழுக்கத்தான் செய்யும். அப்படியிருந்தும், தேகச் சிற்றின்பங்கட்கு வசப்படாமல், அத்தகைய உலக விஷயங்களைக் கடந்து செல்வதுதான் மனிதத்தன்மையாகும். தேகமே ஆத்ம வளர்ச்சிக்கு ஸாதனமாகையால், அதிலிருந்து கொண்டே நல்லதைத் தேட முயல வேண்டும். தேகத்தை நன்றாய் ஆளல் வேண்டும்; அதற்கு முற்றிலும் வசப்பட்டுவிடாமல் அதனைச் சரியான வழியில் உபயோகப்படுத்தினால், அது நமக்கு ஒரு வேலைக்காரன்போல், வேண்டியதைச் செய்யுமேயன்றி நமக்குச் சுமையாயிராது. தேகத்தைப்போல், மனித வளர்ச்சியைத் தடுக்கக் கூடியவைகளான காரணங்கள் இன்னும் இருக்கின்றன. விச்வாசமும் அவிச்வாசமுங்கூட நமதுவளர்ச்சிக்குத் தடையாயிருக்கின்றன. இவைகள் நமது தைரியத்தைக் கெடுத்து, நமது வாழ்வைப் பெறுதற்குத் தடையாயிருக்கின்றன.

ஆனால், மனிதனுடைய ஒவ்வொரு காரியமும், அதனதன் நீதிப் போக்கிலிருந்துதான் விலை மதிக்கப்பெறும். நமது காரியங்கள் பல சமயங்களில் தோல்வி பெறலாம்; சில சமயங்களில் வெற்றி பெறலாம். தோல்விக் காலங்களில், நாம் மனந்தளர்ந்து, காரியத்தில் முயற்சியை விட்டுவிடப் படாது. விடா முயற்சியுடனிருந்து, இன்னும் உறுதி கொண்டு வேறு நல்ல வழியில் ஆரம்பித்து நடத்தல் வேண்டும். ஒவ்வொரு ஏமாற்றமும் ஒவ்வொரு தோல்வியும் ஜீவர்களாகிய நமது சிற்றறிவையும் ஈசனாகிய கடவுளது முற்றறிவையும் வற்புறுத்தியுணர்த்தி அவரிடம் நமது பக்தியை உறுதிப் படுத்துகிறது என்று எண்ணல் வேண்டும். நமது தோல்வியும் ஏமாற்றமும் உலகத்தாரால் தாழ்வாக மதிக்கப்பட்டபோதிலும், நாம் கொண்டு நடத்தும் விடா முயற்சியால் கடவுளுக்கு உவப்பையும் கருணையையும் அதிகப்படுத்திக் கொண்டேயிருக்கும்.

பூர்வ ஜன்ம வாசனையைப் பூர்த்தி செய்யவும் அதிர்ஷ்டத்தை யனுபவிக்கவும் மாத்திரந்தான் ஜீவர்கள் சிருஷ்டிக்கப் பட்டிருக்கிறார்களென்று எண்ணிவிடப் படாது, ஆனால், ஜீவர்களது சிருஷ்டிகர்த்தாவாகிய கடவுளது காரியங்களைப் பூர்த்தி செய்வதற்கும், அவரால் சிருஷ்டிக்கப்படும் ஏனைய ஜீவர்கட்கு வழிகாட்டியாக இருக்கவும் சிருஷ்டிக்கப் படுகிறார்கள். ஜீவர்கள் காலதேச வர்த்தமானங்களைச் சார்ந்து வாழ்பவரல்லர்; ஆனால், கடவுளைச் சார்ந்தே வாழ்க்கையைப் பெறுகின்றார்கள். கடவுள், தனது செல்வங்களாகிய ஜீவர்கள், அழிந்து போகும் உலகப் பொருள்களிலேயே ஈடுபட்டிருந்து தாழ்வதில் விரும்புகிறதில்லை; ஆனால், அவர்கள் தன்னை நினைந்துத் தனது காரியங்களில் துணை செய்யவேண்டுமென்றுதான் விரும்புகிறார். ஜீவர்கள் உலக விஷயங்களில் ஈடுபட்டு உண்மைத் தர்மத்தை அதாவது கடவுட் பக்தியை அல்லது கடவுட்டன்மையை யிழந்து நிற்கும்போது அவர்கட்குத் தோல்வியையும் ஏமாற்றத்தையும் தந்து, அவர்கட்குக் கடவுட் பக்தியை—கடவுளம்சத்தை—கடவுட்டன்மையைப் புதுப்பித்துக் கொடுக்கிறார். இந்தக் கடவுளருள், ஜீவர்களாகிய நமது நினைவின் அளவுக்கும் நமது நீதியறிவுக்கும் உட்படாமல் மேம்பட்டிருக்கிறது. இந்தக் கடவுட்டன்மையே நம்மை அழியும் நிலைமையிலிருந்து அழியா நிலைமைக்குக் கொண்டு போகும் சக்தியுடையதாயிருக்கிறது.

நாம் பரிசுத்தராக வேண்டுமேயென்னு மெண்ணத்துடனுழைக்கும் இந்தக் கடவுட்பக்தியையும் அவ்வப்போதுவிளைந்து



கொண்டிருக்கிற வெற்றி தோல்விகளுமே மற்றொரு உலகமுண்டென்னும் உண்மையை வற்புறுத்திக்கொண்டிருக்கின்றன. சுகமும் துக்கமும் வெற்றியும் தோல்வியும் புண்ணிய பாவங்களும் ஒரு ஆன்மாவின் முன்னேற்றத்துக்கு ஸாதகங்களாக இருக்கின்றன. இப்படிப் பக்குவப் படாமல், பரிசுத்த உலகத்தில் இவனுக்கு இருக்கநிலைக்கப் பெற்றால், அந்த அவன் பரிசுத்த அநுபவம் பெறாமல், ஒரு தேக்கநீர் போல யாதொரு முன்னேற்றமுமடையாமல் அசைவற்றே நிற்பான். தனது துக்கம் தோல்விகளில் இவன் கடவுட் பக்தியை யதிகம் பெற்று, தனது வாழ்க்கையில் உயர்ந்த அம்சங்களைப் பெறுதலில் நினைப்புடையனாகிக் கடவுளை நோக்கிப் பிரார்த்தனை செய்து முயன்று முன்னேறுகிறான். பரிசுத்த அறிவை—பரிசுத்த வாழ்க்கையை—பரிசுத்த அம்சத்தைத் தேடிக் கொள்வதற்காக உழைத்துவரும் ஒவ்வொரு துறையும் அவற்றுள் தோன்றும் ஒவ்வொரு படிகளும் அவற்றுள் நிகழும் நழுவலும் ஏற்றமும் கடவுட் காரியங்களாகவே மதிக்கப்படல் வேண்டும். தனதாக ஜீவன் மதிக்கவே படாது. விடாமுயற்சியுடன், பூர்வீகர்களது நன்னெறியைப் பின்பற்றிப் பின்விளைவை எதிர்பாராது உழைத்துப் போவதே ஜீவர்களது கடமையாகும்.

---

### ஓர் வகை அடுக்கு.

அனைத்து மிருந்தால் அடுக்குதான்
அதிகஞ் செலவேல் இடிக்குதான்
அம்மனுக் கடிப்பது உடுக்குதான்
அதிலய தாகில் ஒடுக்குதான்
தேளுக் கிருப்பது கொடுக்குதான்
தேள் கொட்டினலது கடுக்குதான்
திருடன் நுழைவது சடுக்குதான்
திருடிப் போவதும் துடுக்குதான்
அபாயம் வந்திடில் திடுக்குதான்
ஆபத்து நேரிடின் நடுக்குதான்
மாப்பிளைக் கிருப்பது முடுக்குதான்
மாமியா ருறுவது கடுப்புதான்
வெற்றி யுள்ளானுக்கு மிடுக்குதான்
வெற்றியில் லானுக்கு ஒடுக்குதான்
இவற்றைச்சொல்வது நெடுக்குதான்
இவையெல்லாமோர்வகை அடுக்கு [தான்.

---

### தேவகோட்டையும் தண்ணீர் வசதியும்

தனவைசியநாட்டின் தலைநகராகிய இவ்வூரில் இக்குறையொன்றே மிக வருந்தற் குரியது. ஜல வசதியை யூட்டுந் தண்ணீர்க் குழாய்களேனும் கிணற்று வளப்பமேனும் இல்லை. ஆயினும், புண்ணிய சீலர் பலரால் முற்காலத்தில் வெட்டப்பட்ட குளங்கள் பல இருக்கின்றன. அவற்றுட் சில, தண்ணீர் வருவாய்க்கேற்ற வாய்க்கால் வசதியின்றி மடைவாய்கள் அடைக்கப்பட்டுக் கிடக்கின்றன. அசுத்தத் தண்ணீர் வருதல் பற்றிச் சுகாதார வர்க்கத்தாரால் தண்ணீர் வாராமலே தடைப்படுத்தப்பட்டுச் சில பொட்டலாய் இருக்கின்றன. இந்நிலையில் குடி தண்ணீருக்கேற்ற குளங்கள் இரண்டொன்றே. நகருக்கு மேற்கே கொஞ்சதூரத்தில் சிலம்பணி என்னும் ஊருணி இருக்கின்றது. நகரின் மத்தியிலிருப்பதும் நன்னீர் நல்குவதும் வெள்ளையனூருணி என்னும் குளமேயாகும். ஜனங்களால் விழைந்து பருகப்படும் தண்ணீர் நிறைந்து மிளிரும் குளம் இது ஒன்றே. மேற்கூறிய ஊருணிகளிரண்டும இவ்வூர்ச் சிதம்பர விநாயகர் தேவஸ்தானத்தைச் சேர்ந்தவை. வெள்ளையனூருணித் தண்ணீர் சில வருடகாலமாய்க் கேடுறத் தொடங்கியது. சென்ற வருடத்தில் நீரின் நிறமும் குணமும் படுகேடாய்க் கெட்டிருந்தது. பகீரதப்பிரயத்தனத்தின்மேல் அந்நிலை நீங்கிப் புதுத்தண்ணீர் சுத்தமாய் இருக்கின்றது. ஆயினும் சென்ற வருடங்களில் எக்காரணத்தால் தண்ணீர் கெட்டிருந்ததோ அது இன்னும் சீர்திருத்தப்படவில்லை. ஊருணிச் சொந்தக்காரர்களாகிய சிதம்பரவிநாயகர் தேவஸ்தானத்தாரே அதன் கேட்டிற்குக்காரணஸ்தர்கள் என்பதுமிகையாகாது. தண்ணீரை அவர்கள் நேர் முகத்தான் கெடுக்கவில்லையாயினும், அவர்களின் செய்கையே கெடுத்ததென்பது நிச்சயம். பணவரும்படியைக் கருதி இவ்வூருணியைச் சுற்றிலும் பல கடைகளையும், காய்கறி விற்பனைச் சாலைகளையும், வண்டிச் சாமான்கள் இறக்கி விற்கும் பேட்டையையும், ஏற்படுத்தி உயர்நீர்க் குளத்தைபோம்பாது எச்சில் துப்பல்கள் அதனுள் வீழ்ந்து குப்பைகூளங்கள் மிகுதியும்குவிந்துவீழ்ந்து அசுத்தங்கள் அனைத்தும் அடியிலும் மேற்பரப்பிலும் பரவி நிறத்திலும் மணத்திலும் குணத்திலும் வேற்றுமைப்படச் செய்துவிட்டனர். மேற்கூறிய காரணங்களாலேயே சென்ற ஆண்டில் தண்ணீர் கெட்டது. இவ்வாண்டிலும் இக்குறைகள் நீக்கப்படாதிருந்தலால் இப்பொழுது தண்ணீர் நிறத்தில் சிறிது மாறுபடத் தொடங்கியிருக்கிறது. இப்படியே கவனியாமல் இன்னும் கொஞ்சகாலம் விட்டு விட்டால் தண்ணீர் முழுதும் கெட்டுப்போய்விடும். பிறகு, ஜனங்கள் நல்ல தண்ணீரின்றித் தவிக்க நேரிட்டுவிடும். ஆகையால், சிதம்பர விநாயகர் தேவஸ்தானத்தாரும் இவ்வூர் ஸ்தல ஸ்தாபனச் சபையாரும் இவ்விஷயமாய் வேண்டுவன செய்து ஜனோபகாரத்தைச் செய்யக் கடமைப்பட்டிருக்கின்றார்கள். ஆயினும், அவர்கள் இன்னும் தங்கள் கடமையை நிறைவேற்றுதல் வராவிருக்கின்றனர். எத்தனை முறைகளிலோ பத்திரிகைகளில் எழுதியும் சுகாதார மேற்பார்வையதிகாரி அறிக்கைகள் அனுப்பியும் எவ்விதப் பயனுமில்லை. அந்தோ! ஸ்தல ஸ்தாபனச் சபையே! தொழில்வரியும் வீட்டுவரியும் மிகுதமாய் வசூலிக்க ஏற்பாடு செய்யும் உன் அதிதீவிர புத்தி சுகாதாரத்திலேன் சுருசுருப்பாய்ச் செல்லாது தூங்குகிறது? இதைக் கண்ணுற்ற பிறகேனும் பொதுஜன சுகத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்ய உனக்கு இறைவன் அருள்புரியட்டும். தேவஸ்தானத்தார்களே! உங்களுக்கு உள்ள பொருள்களே போதுமானவைதாமே. சந்தைவைத்துத் தண்ணீரைக் கெடுத்து ஜன சௌக்கியத்திற்குப் பங்கமுண்டாக்கியோ உங்களிறைவருக்குப் பணம் சேர்க்க வேண்டும்? மக்கட்குதவலன்றோ மாதேவர்க்குகந்த செல்வம்? உலகநிலையறியா உங்கள் போன்றாரால்ன்றோ சென்னைமாகாணத்திலே மற்றவர், இஸ்லாமியர் முதலிய மதத்தினருக் கில்லாது ஹிந்துக்களாகிய நமக்கு மட்டும் நம்மவராலேயே ஹிந்துமத தேவஸ்தான பரிபாலன மசோதா ஏற்பட்டிருக்கிறது? இனியேனும், காலநிலை அறிந்து கடவுளுக்குப் பிரீதியான மக்கட்குதவுதலில் மனமுவந்து இறங்குங்கள். இறைவன் றுணைசெய்க.

தேவிபாலன்.

---

# உலக நிகழ்ச்சி.

மகாத்மா சிறை சென்று இன்றோடு ௪௦௬ நாட்களாகின்றன. (ஷ ௧ நாட்கள் ௪௦)

* * *

வைத்யர் வரதராஜுலு நாயுடுவின் வரி மறுப்புக்காக, அவரது நிலங்களும் ஜப்தி செய்யப்பட்டன.

* * *

ஸ்காட்லாந்திலிருந்து ௪௦௦௦ பேர்கள் கப்பலேறிக் கானடாவுக்குப் போய் விட்டார்களாம்.

* * *

ஒத்துழையா இயக்கம் கொரியாவிலும் நடந்துகொண்டிருப்பதாகத் தெரிகிறது.

* * *

தந்திமூலம் புகைப்படமெடுக்கும் இயந்திரமொன்றைப் பாரிஸில் ஒருவர் கண்டு பிடித்திருக்கிறாராம்.

* * *

பிரிட்டிஷ் வரவு செலவு திட்டத்தைக் கணக்குப் பார்த்ததில் ௩௪௦ லக்ஷம்பவுன் மிச்சப்படுகின்றனவாம்.

* * *

சீனாவில், கோடை காலத்தில் சில காலங்களில், ஆறுகளிற் படகுகளை மாடுகள் இழுத்துச் செல்கின்றனவாம்.

* * *

லாசேனில் இரண்டாம் முறையாகக் கூட்டப்பட்டிருக்கும் மகாநாட்டிற்குச் ருஷ்யா அழைக்கப்படவில்லையாம்.

* * *

மூல்டானில் வைதிகப் பிராமணர்கள் சின்னாட்கட்கு முன் ஒரு முஸ்லீம் மாதினை இந்து மதத்திற் சேர்த்தார்கள்.

* * *

பர்மா, ப்ரோம் என்னுமிடத்தில் உள்ள சேத்மானி சிங்கா சாராபாய் புஜ்வாலா என்பவர் திலகர் நிதிக்கு ௧௦,௦௦௦ ரூபாய் அளித்துள்ளார்.

* * *

கொரியாவில் ஏற்பட்ட கடற்கொந்தளிப்பால், ௪௦௦ செம்படவர்களும் மற்றவரும் கடலிற் காணாமற் போய்விட்டனராம்.

* * *

ஸநாதன தர்ம ஸம்ரக்ஷண ஸம்மேளனம் மே மாதம் ௨-ம் நாள் திருவானைக்காவில் ஸ்ரீ ஜகதகுரு மடத்தில் நடைபெறுமாம்.

* * *

இங்கிலாந்தில் ஷேக்ஸ்பியர் என்னும் கவிசிரேஷ்டரின் ஞாபகச் சின்ன நிதிக்காகப் பணம் வசூல் செய்ய ஆரம்பித்திருக்கின்றார்கள்.

* * *

௧௫ அடி உயரமும் ௹ அடி சுற்றளவும் முன்னை ௧அ அங்குல நீளமும் உடைய மெழுகுவர்த்தி யொன்றை நியூயார்க் நகரத்தில் ஒருவர் கண்டு பிடித்திருக்கிறாராம்.

* * *

ஆஸ்திரேலியா செல்வதற்காகப் பெல்பாஸ்டில் தயாரிக்கப்பட்டிருக்கும் பெரிய கப்பலில் ௬௩௪ பிரயாணிகள் ஏக காலத்தில் செல்லக் கூடுமாம்.

* * *

தேசபந்துதாஸ் இன்னும் ௪௦ நாட்களில் சென்னைக்கு வந்து தமிழ் ஜில்லாக்களில் பற்பல தலைநகர்கட்கு விஜயம் செய்வாரென்னும் செய்தி எட்டுகின்றது.

* * *

திராவிட ரத்னம், ஸ்ரீமான் கிருஷ்ணஸ்வாமி சர்மா "மாடர்ன் ரெவியூ" மாதிரியில் மாதாந்தத் தமிழ்ப் பத்திரிகை யொன்றை நடத்துவதாக உத்தேசித்திருக்கின்றாராம்.

* * *

ஏப்ரில் ௰௩-நாளோடு திலகர் நிதிக்கு வசூலான மொத்தத் தொகை ரூ. ௨௩, ௭,அ௱௬௯-௯-௯ என்று ஸ்ரீமான் எஸ். கஸ்தூரிரங்கையங்காரவர்கள் அறிக்கை மூலம் அறிவிக்கின்றார்கள்.

* * *

தேயிலை வரி நிர்ணயக்கூட்டத்தின் சிபார்சின் பேரில் இந்தியாவில் விளைந்து ஏற்றுமதி செய்யப்படும் தேயிலைக்கு ௧௦௦ பவுண்டுக்கு ௩-அணா வீதம் கடற் சுங்கவரி ஏற்படுத்தப்பட்டிருக்கிறது.

* * *

தூத்துக்குடியில் துறைமுகமொன்றைக் கட்டுவதற்காக, அரசாங்கத்தார் ௪௦லக்ஷம் ரூபாய் கடன் கொடுத்துதவுவதாக ஒப்புக்கொண்டுள்ளார்களாம். இதனை ௩௦-வருஷங்கட்குள் திருப்பிவிடவேண்டுமாம்.

* * *

உத்தர த்ருவத்தைக் கண்டு பிடித்துவிட்டதாக ஏமாற்றிய வரும், இமயமலையின் கௌரிசங்கர் என்னும் சிகரத்தைக் கண்டுபிடிக்கப் போனவருமான டாக்டர் குக் என்பவரைக் கைது செய்துவிட்டார்களாம்.

* * *

ஸ்ரீமான் வால்டர் கிறிஸ்தி என்பார் இரட்டையாக மூன்று ஜதை சக்கரங்கள் கூடிய ஆயுதந் தாங்கிய வண்டி யொன்றை, நிலத்திலும் நீரிலும் ஆகாயத்திலும் செல்லும் ஆற்றலைப் பெற்றுள்ளதாகக் கண்டு பிடித்திருக்கிறார்.

* * *

சேலம் பிரதான சிறைக் கூட்டத்துக்கு மேல் அதிகாரியான ஸ்ரீமான் அப்ஸல் என்னும் ஒரு வெள்ளையனுக்கு ஒரு வி.பி.பார்சல் எடுத்துக்கொண்டுபோன ஒரு தபாற்சேவகனை, அவ்வதிகாரியும் அவரதுமனைவியும்பார்சலிற் கையெழுத்திட்டு வாங்கிக்கொண்டு பணம்கொடுக்காமல், அடித்தும் தள்ளியும் நாய்களை விட்டுக் கடிக்கச் செய்தும் துரத்திவிட்டார்களாம். இச் செய்தி மேலதிகாரிகட்குத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

* * *

நாகப்பட்டணம் மஞ்சக்கொல்லையில் வசித்துவரும் ஸ்ரீமான் ப. லெ. வேங்கடராம சாஸ்திரிகள், கதர் ஆடை அணியாத ஆடவர் வசிக்கும் வீட்டில் தாம்உண்பதும நெருப்புநீர் பழக்கம் வைத்துக்கொள்வதும் காம்பூஸம் பெறுவதும் தமமனச் சாட்சிக்கு விரோதமாகத் தோன்றுவதால், பந்துக்களும் நண்பர்களுமாகியகதர் தரியாதார் அதிகாரிகட்குத் தம்மை அழைப்புறுத்தல் வேண்டாமென்று விண்ணப்பித்துக் கொண்டிருக்கிறார்.

* * *

ஒருவருஷக்கடுங்காவல் தண்டனையும் ௧௦௦௦ரூபாய் அபராதமும் விதிக்கப்பெற்று மகாத்மாவுடன் சிறை சென்றிருந்த ஸ்ரீமான் சங்கரலால் பாங்கர், ஒருவருஷத்துக்குப்பின்- அபராதம் கொடுக்காததற்காகச் சமீபத்தில் அவருடைய மோட்டார் இயந்திரவண்டி ஏலமிடப்பட்டு அபராதம் வசூலிக்கப்பட்டபின், ஏப்ரில் ௧௬உ விடுதலைசெய்யப்பட்டார். பல இடங்களில் வரவேற்கப்பட்டார். மகாத்மாவின் சிறைவாசத்தைப்பற்றிய குறிப்புகளும் பல இடங்களில் சொன்னார்.

* * *

அரசமரப் பெருங்கிளை வீழ்ந்து அடிபட்டு மூர்ச்சைபாயவஸ்தைப் பட்டுக் கொண்டிருந்த ஒரு வாலிபர் விஷயமாக இரங்கிய பல நண்பர்கள் "ஏனையா, தாங்கள், அந்த வாலிபன் அவஸ்தைக்காலத்தில், வைத்யசாலையில் இருக்கவில்லையே. இப்படியிருக்கலாமா? என்று அவ்வூர் அரசாங்க வைத்தியரைகேட்டதற்கு, "ஆமாம்! இல்லாமலிருந்தது நலமாயிற்று. இருந்தால், அதனுடன் எத்தனை இழவுகட்கு ஜவாப்தாரியாகவேண்டுமோ? அவருக்கென்ன? சௌக்யமானவுடன் அவரூர்போய்ச் சேர்ந்துவிடுவார். எனக்கென்ன லாபமிருக்கிறது? வேறுயாரையேனும் வைத்தியரை அழைத்துப்போனால் ௧௦௦, ௨௦௦ரூபாய் கொடுப்பார்கள். எனக்கென்ன கொடுப்பார்கள்?" என்று பதில் சொன்னாராம். என்ன! இவர் பெருந்தன்மை? இத்தகைய கருணையற்றவர் இந்தஹிம்ஸா நிவாரணத்தொழிலுக்கு வந்திருக்கப்படாது. அதிலும் பொதுஜனவரிப் பணத்தை பிடுங்கித் தின்னும் ஒரு உத்தரவாதமான இலாக்காவில் உத்தியோகஸ்தராக இருப்பதை நாம் வெறுக்கிறோம்.



# பொதுச் செய்தி.

சிறுவயல்:—சாந்தி வாசக சாலைக்கு ஸ்ரீமான் க. மு. அ. முத்தையா செட்டியாரவர்கள் தலைவராகவும் ஸ்ரீமான் மு. ராம. வ. வள்ளியப்ப செட்டியாரவர்கள் காரியதரிசியாகவும் நியமிக்கப்பெற்றிருக்கிறார்கள். அநேக அங்கத்தினர்கள் சேர்ந்திருக்கிறார்கள். பல பத்திரிகைகள் வருகின்றன. அங்கத்தினரனைவரும் பிரதி தினமும் வாசகசாலைசென்று படித்து வருகிறார்கள் என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

* * *

ஒரு அபேக்ஷகர்:—நமது நாட்டுக்கோட்டை நகரத்தார் அஸோஸியேஷனால் சென்னைச்சட்டசபைக்கு வரும் தேர்தலுக்குத் தேர்ந்தெடுத்து அனுப்பும் ஓர் ஸ்தானத்துக்கு நான் அபேக்ஷகனாக நிற்கத்தீர்மானித்திருக்கிறேன். நம் இனத்தாருக்கு என்னால் கூடியதை உண்மையுடனுழைக்கத்தயாராக இருக்கிறேன்; ஆகையால் தயவு செய்து என்னை ஆதரிக்கவேணுமாய்க் கேட்டுக்கொள்கிறேனென்று சென்னையிலிருந்து ஸ்ரீமான் அ. மு. முருகப்ப செட்டியார் எழுதுகிறார்.

* * *

திருவாசகத்திருமடாலயம்:—ஆளுடையார் கோவிலென்னும் திருப்பெருந்துறையில், பெரியார் பணித்த கட்டளையைச்சிரமேற்கொண்ட அடியேனால் திருவாசகத் திருமடாலய மென்றொரு சிவாலயம் நியமிக்கப்பெற்றுள்ளது. அவ்வாலயத்தில் கற்பகவிநாயகர் முதலிய சிவமூர்த்திகட்கு நிகழும் சித்திரைமீ ௨௰௨ உ புதன்கிழமை ௩-நாழிகைக்குமேல் ௧௦ நாழிகையளவில் மகாசாந்தி மகாகும்பாபிஷேகம் நடைபெறுமென்று, அரிமளம் அ. அரு. அருணாசலச் செட்டியாரவர்கள் குமாரர் அண்ணாமலைச்செட்டியார் பத்திரிகை மூலம் அறிவிக்கிறார்கள்.

* * *

கோயில் அர்ச்சனை:—கண்டரமாணிக்கம் சிவன்கோயிலில் பௌர்ணமிகளில் நடாத்திவரும் அர்ச்சனைகளை ஒரு ரூபாய் ஜாஸ்தியாகத் தந்தால் அல்லாமல் செய்ய முடியாதென்று குருக்கள் சொன்னாராம். இது உண்மையானால் நகரத்தவர்கள் ஏன் கோயிலுக்குள்ளே போகவேண்டும்? அரைஅணாவுக்கு ஒரு அணா கேட்கலாம். ஒரு அர்ச்சனைக்கு ஒரு ரூபாய் எங்கே வாங்குகிறார்கள்? சஹஸ்ரநாமத்துக்கானால் அத்தொகை கொடுக்கவேண்டியதுதான். மேலும், சிலரைக் கோயிலினுள்ளே வரக்கூடாதென்றுஞ் சொல்லுவதாகவும் அறிகிறோம். கோயில் பொதுவான இடம் என்பதை மட்டும் நினைக்கவேண்டுகிறோம் என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

* * *

வேகுப்பட்டி இரத்தினவிலாச வாசகசாலை:—இவ் வாசகசாலையின் ஓர் அங்கமாக சித்திரைமீ ௩உ உ ஸ்ரீ ஞானசம்பந்தர் செந்தமிழ்க் கலாசாலையென்னும் பெயருடன் ஒரு கல்லூரி ஸ்தாபனஞ் செய்யப்பட்டது. இக்கல்லூரியில் இலக்கண இலக்கிய நூல்களும் சமயக்கல்வியும் போதிக்கப்படுமென்று தெரிகிறது. வெம்பலக்குடி இராமசாமிப் பிள்ளையென்பார் ஆசிரியராகப் போந்துள்ளார்கள். இவ்வாசகசாலையின் தலைவரும், தமிழபிமானம் பெரிதுமுடையவர்களுமான ஸ்ரீமான்,கு.ம. கு. அ அண்ணாமலைச் செட்டியாரவர்களே இதையேற்றுக் கொண்டு நடத்திவருகின்றார்கள். காலத்திற்கேற்ற இப்புண்ணியச் செயல் சாலச் சிறந்ததாகும் என்று மேலைச்சிவபுரி சொ. பழனியப்ப செட்டியார் எழுதுகிறார்.

* * *

புதுவயல் தனஸ்ரீஜாரீந்தி சங்கம்:—இதன் முதலாவதாண்டு நிறைவு விழா சித்திரைமீ ௩௰உ ஞாயிற்றுக்கிழமையன்று இருவேளைகளினும், தேவகோட்டை, ஜில்லா நியாயாதிபதி ஸ்ரீமான் ஸ்ரீ ரா. ரங்கஸ்வாமி ஐயங்கார் (பி. ஏ., பி எல்) அவர்கள் தலைமையில் நடைபெறும். அவ்வமயம்பல அறிஞர்கள் உபந்யஸிப்பார்கள் என்று ஸங்கத்தார் பத்திரிகை மூலம் அறிவிக்கிறார்கள்.

* * *

திருநாவுக்கரசு சுவாமிகள் குருபூஜை யுற்சவம்:—உலகிலுள்ள சமயங்கள் பல. அவற்றுள் சைவசமயம் என்பது ஒன்று. இச்சமயம் உண்டாய நாள் வரையறுத்தற்கில்லை. பிற சமயத்தவரால், இச் சைவ சமயத்திற்கும் இச் சைவ சமயத்தினர்க்கும் இடையூறு ஒவ்வொரு காலத்தி லிருந்ததுண்டு. இடையூறு நேர்ந்த காலத்தில் சிவபெருமான் திருவருள் பெற்ற பெரியார் பலர் தோன்றி அவ்வக் காலத்தில், இடையூற்றினை அகற்றிச் சைவ சமயத்தினை விளக்குவித்தனர். அங்ஙனம் விளக்குவித்த பெரியார்களுள் சிறந்து முன்னிற்பார் திருநாவுக்கரசு சுவாமிகளே. சைனசமயஞ்சார்ந்து, இடருற்று, சைவ சமயச் சார்பால் இடரினின்று நீங்கி, ஏனைய சமய நிலையும், சைவ சமயத்தின் உயர்வையும் தாம் கண்டு, நம்மனோர் உய்யத்தாம் திருவாய் மலர்ந்த தேவாரத்தான் உணர்த்திய பரம குருமூர்த்திகள் திருநாவுக்கரசு சுவாமிகள். இச் சுவாமிகள் பெருமைகளுள் சிறந்தது கருங் கற்றெப்பத்தில்கடற்கரையேறியதே.இதனை "பொங்கடற் கன் மிதப்பில் போந்தேறுமவர் பெருமை" என்ற பெரிய புராணச் செய்யுள் தெரிவிக்கும். இப் பெருமைசால் நிகழ்ச்சி நேர்ந்தது பூந் திருப்பாதிரிப் புலியூர்ப் பாங்கரில். இத் திருப்பாதிரிப் புலியூர் தென்னிந்தியா ரயில்வே ஸ்டேஷனுள் திருப்பாப் புலியூர் (கூடலூர்ப் புதுப்பட்டணம்) எனப் பெயரிய ஸ்டேஷனை யுடையது. இத் திருப்பாதிரிப்புலியூர் மூர்த்தி தலம் தீர்த்தம் மூன்றும் சிறப்பு உடையது. திருஞானசம்பந்த சுவாமிகள் திருநாவுக்கரசு சுவாமிகள் திருவாய் மலர்ந்த தேவாரங்களையுடையது. இத் தலப் பெருமைகளுள் சிறந்தது திருநாவுக்கரசு சுவாமிகள் கடற்கரையில் இவர்ந்தது. இச் சுவாமிகள் விபவங்களை விளக்கும் உற்சவம் இத் தலத்தில் இல்லா திருந்ததற்கு அன்பர்கள் பலர் வருந்தினார்கள். அன்பர் வருந்தம் அகற்றும் பரமசிவனார், சில ஆண்டுகளின் முன்புமுதல் பழவண்டிப் பாளையம் எனும் திருப்பாதிரிப் புலியூர்க் கலிதீர்த்தாய நகரொன்றின் வசிக்கும் ஸ்ரீமான் தாமோதரம்பிள்ளை யவர்கள் நடராஜ முதலியாரவர்கள் பேரன்பால் கரையேறவிட்டகளிற்கல்லெழும்புதுறையில் கடற்கரை யேறிய விபவ உற்சவம் நடைபெறுகின்றது. ஏனைய விபவுற்சவங்கள் ஒருபுறமிருப்பினும் சித்திரைச் சதயநாளில் பூம்புகலூர்ப்புண்ணியன்திருவடிக்கே திருநாவுக்கரசு சுவாமிகள் சென்றருளிய மகோற்சவம் செவ்வன் நடைபெறுதிருந்தது பேரன்பர் மனதிற் புண்ணை விளைவித்தது. இதனைத் தெரிந்த எப்புண்ணியவான் வந்து இம்மகோற்சவத்தைச் செவ்வன் செய்வித்து அன்பர் பலர்க்கும் ஆநந்தமூட்டுவரோ என எண்ணித் தியங்கியகாலத்தில், புதுக்கோட்டை சமஸ்தானம் இராமச்சந்திரபுரத்தில் வசிப்பவர்களும், புதுக்கோட்டை மற்றைய இடங்களிலும் பெருந்தருமத்தைச் செய்பவர்களும், பெருங்கொடை வள்ளலும், திருப்பாதிரிப்புலியூர்த் தருமகர்த்தராயுமாகிய மகாராஜராஜஸ்ரீ நீ. கா முத்தையசெட்டியாரவர்கள் மூன்று ஆண்டுகாக இம்மகோற்சவத்தினை மிக நன்றாகச்செய்விக்கிறார்கள். இந்த ருத்ரோத்காரி-ஆ சித்திரைமீ உஎஉ புதன்கிழமை காலை ஸ்ரீபாடலேசர் ஸ்ரீ பிரஹந்நாயகி அறுபான்மும்மை நாயன்மார் முதலிய மூர்த்திகட்கு மஹாபிஷேகமும் அப்பகலில் ஸ்ரீமத் ஞானியார் மடாலயத்தில் மாகேசுர பூஜையும் மாலை ஸ்ரீபிரஹந்நாயிதாசக்கிதியில் திருநாவுக்கரசு சுவாமிகள் சரிதஉபந்யாசமும் இரவு பஞ்ச மூர்த்திகளும் வெள்ளி இடப வாகனங்களிலும் நால்வரும் வெள்ளி விமானங்களிலும் சேக்கிழார் சுவாமிகளும் பன்னிரு திருமுறையும் யானையின் மேலும் திருவீதியிற் பவனிவரலும் பின், திருநாவுக்கரசு சுவாமிகள் சிவசோதியிற் கலத்தலும் நிகழும். அன்பர் வந்து தரிசித்தும் கேட்டும் நன்மையுற வேண்டுகிறேன்.

இவ்வுற்சவத்தினை மிகு விபவமாக நடத்தும் ஸ்ரீமான் நீ. கா. முத்தையசெட்டியாரவர்கட்குச் சரீர சுவுக்கியம் சந்தானம் முதலியவற்றைத் திருநாவுக்கரசு சுவாமிகள் தந்தருள வேண்டுமென்று அச்சுவாமிகள் சரணாவிந்த யுகளங்களை வணங்குகின்றேன் என்று திருப்பாதிரிப் புலியூர் ஞானியார் மடாலயத்திலிருந்து தெரிவிக்கிறார்கள்.



*காலென்செயும்! வினைதானென்*
*செயும்! எனை நாடி வந்த*
*கோளென்செயும்! கொடுங்கூற்*
*றென்செயும்! குமரேச ரிரு*
*தாளுஞ் சிலம்புஞ் சதங்கையுந்*
*தண்டையும் ஷண்முகமும்*
*தோளுங் கடம்பும் எனக்குமுன்னே*
*வந்து தோன்றிடினே.*

—கந்தாலங்காரம்

தனவைசிய ஊழியன்,
காரைக்குடி சித்திரைமீ கடுஉ

## வேலை செய்தல் வேண்டும்.

ஒருகாரியம் சித்தியடைய வேண்டுமானால் அது கைகூடுதற்கான வழியில் சிரத்தை கொண்டு அதில் அபிமான முன்னோர் வேலை செய்தாலன்றி அது கூடாதென்பது உலகறிந்ததொன்று. இது ஒரு சிறு காரிய முதல் மிகப் பெருங் காரியமீறாக வுள்ள அனைத்திற்கும் உடன்பாடு. சிறு காரியத்திற்குச் சிலர் சேர்ந்து சின் முயற்சி செய்தல் அமையும். பெருங் காரியத்திற்குப் பலர் சேர்ந்து பெரு முயற்சி செய்தல் வேண்டும் காரியத்திற்குத் தகுந்த முயற்சியும் அதற்குத் தகுந்த ஆட்களும் இருப்பின் காரியம் எளிதிற் கைகூடும். ஆளும் முயற்சியும் குறையின் காரியம் அதற்கேற்ப மிதமாகவே நடைபெறும். நிற்க,

ஆட்க ளதிக மிருந்து காரியம் ஒன்றும் நடைபெறா திருத்தலும் ஆட்கள் மிகக் குறைவாக விருந்து காரியம் பலமாக நடந்தலும் உண்டு. முன்னையோர் ஆற்ற லில்லாப் பலராக விருப்பர்; பின்னையோர் ஆற்றலுள்ள சிலராக விருப்பர். எத்தனை மிகுதியானவராயினும் அன்றி மிகச் சிலராயினும் வேலை செய்தலிற் றளர்தல் ஆகாது. வேலை—முயற்சி பலமாகச் செய்தால், திருவருட் செயல் ஆமாறு ஆக! பயன் கிடைப்பது கிடைக்க!! பயனே அடியோடு இன்றி வாளாபோயினும் போக! பயனின்மை கண்டு வருந்துதல் வேண்டாம்! வேண்டாம்!! பயன் பெறுமை நமது குறையன்று! வேலை செய்யாமையே நமது குறை. ஆகலின் ஆற்றலுள்ளளவு வேலை செய்தல் வேண்டும். வேலை செய்து கொண்டிருப்பின் கடமையிற் றவறிய பாவத்திற்கு ஆளாக மாட்டோம்.

பயனின்மையால் பலமான முயற்சியும் குறைவுடையதாகப் பலர்க்குத் தோற்றலாம். அது கொண்டு அம் முயற்சியாளர்கள் வருந்துதல் ஆகாது. இது பற்றிப் பல முறை பலபட எழுதிக் கிடக்கின்றன.

ஈண்டு நமது சங்கத் திருமண விஷயத்தை எடுத்துக் கொள்வோம். நமது மண விஷயத்தில் நன்னோக்கங் கொண்டோர் சமூகத்தில் சம பிரிவினர் இருப்பரென் றெண்ணுகிறோம். வேறுவித அபிப்பிராய முடையோரும் உளர். அவர்கள் ஒருபாற் கிடக்கட்டும். அவர்களைப் பற்றி நாம் கவலைப்படத் தேவையில்லை. நமது விஷயத்தில் அபிமானமுள்ள அன்பர்கள் வேலை செய்ய முன் வருவார்களானால் எவ்வளவு சாதகமாக விருக்கும். நாம் இங்ஙனம் வரைதல், "ஊழியர் சங்கத்தில் ஆட்குறைவு" எனக் கூறுபவர் கூற்றுக்குப் பலம் தருவதாகும் என யாரும் எண்ணி விடுதல் வேண்டாம். ஊழியர் சங்கம் குறைந்த அங்கத்தினரைக் கொண்டதாயினும் ஆக! நிறைந்த அங்கத்தினரைக் கொண்டதாயினும் ஆக! அதனைப் பற்றிக் கவலைப்படுதல் வேண்டாம். அது செய்யும் வேலையை ஆராயலாம்.

அபிமானமுள்ளோர்—கொள்கையில் ஈடுபட்டோர், கலந்து வேலை செய்யல் வேண்டும். சிறு தொகையினராக விருப்பின்—அல்லது அவர்கள் செய்யும் வேலை சிறுபயன் தரத்தக்கதாக விருப்பின் தங்கள் துணையால் அது பலமுடையபலாம். அல்லாமல் பெருந் தொகையினராகவோ, பெரும் பயன் தரத்தக்கதாகவோ விருக்குமானால், தங்கள் உழைப்புஞ் சேருமானால், மிகப் பிரயோஜனமாதல் கூடும். ஆகலின் அபிமான முன்னோர் வேலை செய்யாது வாளாவிருத்தல் ஆகாது. தங்களால் எவ்வளவு முடியுமோ அவ்வளவு செய்யலாம். நமது மண விஷயத்தில எவ்வளவு சிறு உதவியை ஒருவர் செய்யினும் நமது சங்கத்தார் ஏற்றுக் கொள்வ ரென்பதிற் றடையில்லை. தாங்கள் எண்ணுவதை—தாங்கள் வாயாற் சொல்வதைச் செய்கையிற் செய்து காட்டினாற் போதும். நமது சமூகத்தில் நமது மணத்தில் விருப்பமுள்ள அனைவரும் சிறு வேலை செய்ய ஆரம்பித்தால் இந்நாள் எண்ணிறந்த மணங்கள் நடந்துவிடும்.

அநேகர் "இது மிகவும் நல்ல காரியம்" என்றும் இது இன்றியமையாது செய்து தீர வேண்டியதுதா னென்பதற்குப் பல காரணங்களும் கூறுகின்றனர். அதனை நமது சமூக ஊழியர்கள் காதாற் கேட்கும் பொழுது மகிழ்ச்சி கொள்வார்களென்பது ஒருதலை. இவர்கள் செய்கையில் வேலைசெய்ய இறங்கி விடுவார்களானால் மிகவும் மகிழ்ச்சி கொள்வார்க ளன்றோ?

சமூகத்தில் பலர்க்கு மண விஷயத்தில் ஆர்வ முண்டாகுமாறு செய்த இறைவன், விரைவில் அன்னார்க்கு வேலை செய்யும் ஆற்றலை அளிப்பானாக!

## இடிமுழக்கம்.

### நம்மவர் கவனிக்க.

இவ்வாரப் பத்திரிகை கூ-ம் பக்கம் வெளிவரும் "நமது பிரயாணமும் நாம் படும் கஷ்டமும்" என்னும் வியாசத்தை நாட்டுக்கோட்டை நகர வைசியர்களாகிய நம்மவர் ஊன்றிப் படித்து நன்கு கவனிக்க வேண்டுகிறோம். இதுவரையிற் பல பயணங்களில் இத்தகைய கஷ்டங்கள் நேர்ந்திருப்பது அநுபவமாயிருப்பினும், இனிமேலாவது, அவ்வியாசத்திற் குறித்தபடி அயல் நாடுகளிலிருந்து ஊருக்குத் திரும்பும் போது அநியாய விலை கொடுத்து அந்நியச் சாமான்களை வாங்கிக் கப்பலில்ஏற்றி அநியாயக் கூலிகளையும் லஞ்சங்களையும் தீர்வைகளையும் அந்நியருக்குக் கொடுத்துத் தனநஷ்டமும் மனக்கஷ்டமும் படல் வேண்டாமென்று நாமும் வேண்டுகிறோம்.

### பாராளும் மன்றம்.

சென்ற பத்து வருஷங்கட்குள் இந்தியத் தபால் வருமானத்திலிருந்து அரசாங்கப் பொக்கிஷத்திற்கு அ-கோடி ரூபாய் சேர்ந்திருக்கிறது. இத் தொகையைத் தபாலிலாக்காவிற்கே திருப்பிக்கொடுத்து, அவ்விலாகாவிலுள்ள கீழ்த்தர உத்யோகஸ்தர்கட்குச் சம்பளத்தில் கூட்டிக் கொடுக்க முயலலாகாதா? என்று ஸ்ரீமாந் அமான் கேட்டதற்கு இந்தியா மந்திரி தபாலிலாகா சிப்பந்திகளின் சம்பளமானது இலாகா லாப நஷ்டங்களைப் பொறுத்து ஏற்படுத்தப்படவில்லை. அத்தபால்வரும்படித் தொகையை அரசாங்கத்துக்கே கைத்துக் கொள்வதாகவும் அபிப்பிராயமில்லை என்று பதில் சொன்னாராம். பின்னர் அத்தொகை எவ்வகையில் செலவு செய்யப்படுமென்பது விளங்கவில்லையே!

### மேல்நாட்டார் நாகரீகம்.

ருஷியாவில் போல்ஷ்விக் அதிகாரிகள் தங்கள் மடாதிபதி திக்ஹான மின்சாரங் கொண்டு தொந்தரவு செய்கின்றார்களாம். இத்தகைய குருத்ரோஹமும் குரு தண்டனையும் தான் மேல்நாட்டார் நாகரீகம் போலும்.

### இந்தியர் தலைகுனிய வேண்டாமோ?

கத்ததைவார் சிற்றரசர் ஜர்மனியில் பிரயாணம் செய்துகொண்டிருந்த போது, ஒரு அமெரிக்கர் பின் வருமாறு கேட்டாராம். "நாங்களுங் கூட உலக சிரேஷ்டர் என்று ஒப்புக் கொள்ளும் மகாத்மா காந்தி சிறையில் இருப்பது உமக்கே வெட்கமாக இல்லையா? இது போன்ற குறையை ௩௦ கோடி ஜனங்களுள்ள தேசம் ஒன்று இவ்வளவு காலம் எங்ஙனம் சகித்திருக்கின்றது என்பது விளங்க வில்லையே" என்றாராம். இதைக்கேட்டு அவர் தலைகுனிந்தனராம். அவர் மாத்திரமென்ன? இந்தியர் எல்லோரும் தலைகுனியவேண்டாமோ? ஆனால், நம்மிந்திய மிதவாதிகளோ ..........?



## தந்திச்செய்தி.

பினாங்கு சித்திரைமீ கடுஉ.

சென்னை உண்டியல் விலை நூற்று எழுபத்து நான்கு.
ஈயம் விலை நூற்றைந்து
ரப்பர் விலை எழுபத்தொன்று.

இரங்கூன் சித்திரைமீ கஙஉ

| | |
|---|---|
| இயந்திர அரசி பெரிது | சசஎ |
| இயந்திர அரிசி சிறிது | சஎ0 |
| புகைரதநெல் | கஅ௫ |
| படகு நெல் | கஅஎ௫ |
| துவரை | ௩௨0 |
| மொச்சை | ௩எ௫ |
| காராமணி | உ௫0 |
| கடலை | உஅ0 |
| உழுந்து | ௩௬௫ |
| தட்டைப்பயறு | ௩௬௫ |
| உண்டியல் | கஎ௫ |
| பவுன் | க௫—௫—0 |
| தங்கம் | ௩௬—அ—0 |
| வெள்ளி | அ௬—0—0 |
| தவணைவட்டி | 0—க௩—௬ |

பணம் நிதானமாயிருக்கிறது.

சென்னை சித்திரைமீ கசஉ

பவுன் விலை க-க்கு க௫ க௩ ௩
வெள்ளி ரூபாயெடை
க-க்கு 0 கச 0

### விசேஷத் தந்தி.

அ-ம் பக்கத்தில் நாம் குறித்தபடி இரங்கூனிலிருந்து தந்திமூலம் வந்த செய்தி [ப—ர்.]

இரங்கூன் சித்திரை கடுஉ

சௌஉற சனிக்கிழமை மொகல் வீதியில் நேர்ந்த அபாயகரமான கலகத்தைப் பற்றி விசாரித்ததில் புதுச் செய்தியொன்றும் காணப்படவில்லை, இரங்கூன் கஜட்டில் கண்டிருக்கிற போலீஸார் அறிக்கையுடன் ஜனங்கள் சொல்வதும் கலகத்தின் பிரதானகாரணத்தில் ஒத்திருக்கிறது. ஒரு பழைய வீட்டைப் பிரிப்பதில் வேலை செய்து கொண்டிருந்த ஒரு குத்தகைக்காரனுடைய கூலியாட்கட்கும் அதற்கடுத்த வீட்டுக்குடையவனான ஒரு சுராட்டி மகமதியனுக்கும் உண்டான சச்சரவு தான் காரணமென்று காணப்படுகின்றது.

விவரம்.

குத்தகைக்காரருடைய கூலிகள் ஒரு புதுக்கட்டிடம் கட்டுவதற்காக அஸ்திவாரம் தோண்டிக் கொண்டிருந்தார்கள். அப்போது, அடுத்த வீட்டுக்குச் சொந்தக்காரனான ஒரு சுராட்டி மகம்மதியர், சில மனிதர்களுடன் அங்கு வந்து, அஸ்திவாரம் தோண்டுதலில் தனது ஆக்ஷேபத்தைச் சொல்லித் தடுத்தார். இது இருதிறத்தாருக்கும் மனஸ்தாபத்தையுண்டுபண்ணிக், கலகத்தைப் பெருக்கவிட்டு கல்லடிகளும் ஆரம்பிக்கப்பட்டன. சிலருக்குப் பலமான காயமும் உண்டாயின. போலீஸாருக்கு சமாசாரம் தெரிவிக்கப்பட்டு, அவர்களும் வந்து சேர்ந்தார்கள். கலகத்துக்குக் காரணரானவர்களைப் போலீசார் போலீஸ் காவடிக்குக் கொண்டு போனார்கள். பின்னர், போலீசார் கலகம் நடந்த இடத்துக்கு வந்து, நகரத்தார் வசிக்கிற மொகல்வீதி அஎ-என்னுள்ள வீட்டிற்குள் நுழைந்து, நாட்டுக்கோட்டைச்செட்டிமார்களையும் அவர்களது குமாஸ்தாக்களில் இருவர்களையும்குற்றவாளிகளாக்கிப்போலீஸ் ஸ்டேஷனுக்குக் கொண்டு போனார்கள். அங்கு அவர்களிடம் வாக்குமூலம் வாங்கிக்கொண்டபிறகு அனுப்பப்பட்டார்கள். ஒரு பெரிய கலக்கம் உண்டுபண்ணப் பட்டது. நகரத்தார்களும் குமாஸ்தாக்களும் போலீசார் மேற் குற்றம் கூறுகிறார்கள். போலீஸார் யாதொரு உத்தரவு (வாரண்டு)மில்லாமல் அந்நகரத்தார் வீட்டுக்குள் நுழைந்தார்களென்று, போலீஸ் அறிக்கைப்படி சொல்லும் இரங்கூன்கஜட்டினாலும் தெரிகின்றது. அவர்கள் அந்த வீட்டில் நுழையும்போது கொடுக்கல் வாங்கல் நடந்துகொண்டுதானிருந்தது. பெரிய முதலாளிகளுடைய கடைகளும் மும்மரமாக வேலைசெய்து கொண்டிருந்த சமயமது. எல். ஆர். ஆர். கடையும் அங்கு கொடுக்கல் வாங்கல் செய்துகொண்டிருந்தது. அந்த சமயத்தில், போலீஸார் உட்புகுந்து செட்டிமார்களையும் குமாஸ்தாக்களையும் கைது செய்தார்கள். இப்படிப் போலீஸார் யாதொரு வாரண்டுமில்லாமல் திடீரென்று வீட்டுக்குள் நுழைந்த செயல் நகரத்தார்களால் நன்கு ஆலோசிக்கப்பட்டு வருகிறது. இச்சம்பவத்தைப்பற்றி யோசிப்பதற்காக, நகரத்தார்களது கூட்டம் ஒன்று கூட்டப்பட்டு தக்கது செய்யப்படுமென்று நான் தெரியலானேன்.

நா. அருணசலம்.

## உள்ளூர்ச் செய்தி.

இரங்கூன் உண்டியல் வட்டம் க—கஉ—0
சென்னை உண்டியல் வட்டம் 0—கO—0

கிராம ஸ்தல ஸ்தாபனம்:—ஷ கூட்டம் உரு-ச-உரு-ல் ச-ரு-O-மணிக்கு ஆரம்பிக்கப்பெற்று, அநேக தீர்மானங்கள் செய்யப்பெற்றன. அவைகளில் முக்கியமான சில:—

க. காரைக்குடி மெ. மெ. வீதியில், தவமுனிசெட்டியார் வீட்டிற்கு எதிரேயும், கொப்புடையம்மன் கோவில் வீதியில் முரு. லெ. வீட்டிற்குச் சமீபத்திலும், அரு. அ. வீதியில் சிவ கி. நா. வீட்டுக்குச் சமீபத்திலும் ஒவ்வொரு காந்த விளக்கு போடுவதென்ற தீர்மானம்.

உ. கொப்புடையம்மன் கோவில் செவ்வாய் உத்ஸவத்தைமுன்னிட்டு ஜனங்கள் சௌகரியத்தை உத்தேசித்து சுகாதாரப் பரிசோதகரால் கீழ்வரும் ஏற்பாடுகள் பிரேரேபிக்கப்பட்டு, அவைகள் அங்கீகரிக்கப்பெற்றன

சுவாமி வரும் வீதிகளைச் சுத்தமாக வைத்துக்கொள்ளும் பொருட்டு, கO கூட்டுக்காரர்கள் உத்ஸவ காலத்தில் நியமிக்கப்பட வேண்டுமென்றும், (ரிஸர்வில்) இருக்கும் இரண்டு குப்பை வண்டிகளுக்கும் இரண்டு ஜோடி மாடுகள் உதவச்செய்ய வேண்டுமென்றும், சாப்பாட்டு காபி கிளப்புகளைச் சுத்தமாக வைத்துக்கொள்ளும் பொருட்டு, கிளப்புக்காரர்களுக்கு சுண்ணாம்பு முதலிய பூசி சுத்தமாக வைத்துக்கொள்ள அறிக்கை கொடுக்கவேண்டுமென்றும், சுவாமி வரும் வீதிகளில் இயந்திர வண்டி முதலிய போகவிடக்கூடாதென்றும், நாற்றமுள்ள இடங்களில் நாற்றத்தைப் போக்கும் பொருட்டு பினைல் என்னும் மருந்து வாங்க வேண்டுமென்றும், கிணறு குளம் முதலியவற்றைச் சுத்தமாக்கும் பொருட்டுப்பொடாஷியம்பர்மாங்கனேட் என்னும் மருந்து வாங்கவேண்டுமென்றும் தீர்மானிக்கப் பெற்றது.

சுகாதாரப் பரிசோதகரவர்கள் சில துணைச் சட்டங்கள் ஏற்படுத்தவேண்டுமென்று கொண்டுவந்த தீர்மானம், பாதியில் கூட்டத்திலிருந்த அங்கத்தினர்கள் ஒருபெண்ணை முன்னிட்டு எழுந்திருந்துபோய் விட்டதால், அடுத்த கூட்டத்திற்கு ஒத்திவைக்கப் பெற்றது.

ஹிந்து மதாபிமான சங்கம்:— சித்திரைமீ கவஞாயிற்றுக்கிழமை மாலையில் பிர்மஸ்ரீ ஆரணி அக்கிரஹாரம் அண்ணாமலை ஆச்சாரியாரவர்கள் பெரியபுராணத்தில் அப்பூதியடிகள் நாயனார் புராணம் உபந்யசித்தார்கள்.



சங்கர ஜயந்தி:—காரைக்குடி மகாஜனங்கள், ஸ்ரீமத் சங்கராச்சாரிய ஸ்வாமிகளின் ஜயந்தி யுத்ஸவத்தைக் கொண்டாடினார்கள் கல்லுக்கட்டி ஏகாதசிமடத்தில் ஐந்துநாட்களும் ஆராதனை நைவேத்யங்களும் உபந்யாஸங்களும் நடந்தேறின. சித்திரைகஉ மாலை பஜனையும் இரவு ஸ்வாமிகள் திருவுருவப்பட ஊர்வலமும் மறுநாள் விடாயாற்றி யுத்ஸவமும், விமிசையாக நடந்தேறின. குருபக்தி விசேஷமுடையவர்கள் அடுத்த ஜயந்தியை யின்னும் விசேஷமாகக் கொண்டாடுவார்களென்று நம்புகிறோம்.

காரைக்குடி வாசகசாலை:—நிகழும் சித்திரைமீ கசஉ வாசகசாலைக் கட்டிடத்தில் மாலை ரு-மணிக்கு ராமநாதபுரம் சங்கீத வித்வான் பிர்ம்மஸ்ரீராஜாமணி ஐயங்காரவர்கள் வாய்ப்பாட்டும் புதுவயல் பிர்மஸ்ரீ ராமநாதய்யரவர்கள் மிருதங்கமும் நடைபெற்றது என்று ஸ்ரீமான் சித. மெ. சிதம்பரஞ் செட்டியார் பத்திரிகைமூலம் தெரிவிக்கிறார்.

---

தனவைசிய ஊழியன்

பத்திராதிபரவர்களுக்கு.

இவ்விடங்களில் வந்த டி. எல். சர்மா அண்டு கம்பெனி அலிகார்பூட்டுகளுக்கு ஏஜெண்டு என்று சொல்லிக்கொண்டு மாதிரி காண்பிக்கும் பூட்டுகள் ஒருமாதிரியாகவும் ஆர்டர் கொடுத்தபிறகு கம்பெனியிலிருந்து வரும் பூட்டுகள் ஒரு மாதிரியாகவும் இருக்கிற சங்கதியைத் தங்கள் ஊழியன் மூலமாய் நமது நேயர்களுக்கு அறிவித்து எச்சரிக்கையிலிருக்கும்படி இதனைப் பிரசுரம் செய்யுமாறு வேண்டிக்கொள்ளுகிறேன். எங்களுக்கும் பூட்டுகள் மேற்கூறியவாறு வந்திருப்பதால் இதை பத்திரிகைமூலம் எல்லோருக்கும் தெரிவிக்கத் துணியலானேன்.

ராம. மு. சுப்பிரமணியன்செட்டியார்,
பூலாங்குறிச்சி.

---

## இரங்கூனில் கலவரம்.

இரங்கூன் சித்திரை கOஉ

நாட்டுக்கோட்டை நகர வைசியப் பிரபுக்கள் அதிகம் வியாபாரஞ்செய்யுமிடமாகிய மொகல்தெருவில் இன்று போலீஸார் பலரைக் கைது செய்திருக்கின்றனர். செட்டிமார்கட்கும் போலீஸாருக்கும் ஏற்பட்ட சச்சரவே இதற்குக் காரணம். ஒரு வீடு கட்டுவது சம்பந்தமாக ஒரு [illegible]டிய மாம்மதியர்க்கும் ஒரு ஹிந்து (கண்டிராக்டருக்கும்) குத்தகைக்காரருக்கும் ஆரம்பத்தில் சச்சரவு ஏற்பட்டுப் பலமாகக் கற்கள் எறியப்பட்டபடியால் போலீஸார் ஸ்தலத்திற்கழைக்கப்பட்டனர். போலீஸார் இருவரையும் கைதுசெய்தனர். வீட்டிற்குள் போகப் போலீஸாரை அநுமதிக்காததற்காக ஒரு நாட்டுக்கோட்டைச் செட்டியாரின் குமாஸ்தாவும் கைது செய்யப்பட்டார். சில செட்டியார்கள் குமாஸ்தாவை விடுவிக்க முயற்சித்த பொழுது அவர்கட்கும் போலீஸாருக்கும் கலகம் ஏற்பட்டு அவர்களிலும் அறுபேர்கள் கைது செய்யப்பட்டிருக்கின்றனர். இப்போது எல்லோரும் காவலிலிருக்கின்றனர். [ர-மி]

குறிப்பு:—இதன் விவரத்துக்கு இரங்கூனிலிருந்து செய்தியை எதிர்பார்க்கிறோம். [ப—ர்]



## நமது பிரயாணமும் நாம் படும் கஷ்டமும்.

இதன் கீழ்க் கையொப்பமிட்டிருக்கும் நாங்களும் இன்னும் பலரும் சென்ற (துந்துபி) ஆண்டு சென்ற திங்கள் இருபத்து நான்காந் தெய்தி வெள்ளிக்கிழமை பினங்கிலிருந்து புறப்பட்டு இருபத் தெட்டாந் தெய்தி செவ்வாய்க் கிழமை காலை கூஉ-மணிக்குசென்னைப்பாலத்துக்கு வந்து சேர்ந்தோம். கொண்டு வந்த சாமான்களைப் பாலத்துக்கு மிகச் சமீபமாயுள்ள தீர்வை போடுமிடத்துக்குக் கொண்டு போகக் கூலியாட்கட்கு அதிகக் கூலி கொடுத்துக் கொண்டுபோனோம். அங்கு ஒவ்வொரு சாமானையும் (பழைய வேஷ்டி முதல்) உதறி யெடுத்து ஒவ்வொன்றுக்கும் அங்குள்ள அதிகாரியின் இஷ்டத்துக்குக் கட்டுப்படாமல், கையில் கொண்டுவந்த சாமான்கட்கும் சொல்லிய தீர்வை ரூபாயைக் கொடுத்து இரண்டு மணிக்கு நகர விடுதிவந்து சேர்ந்தோம். சாக்குப்போட்டுத் தைத்த சாமான்களை யெடுப்பதற்கு மறுநாட் காலை கூ-மணிக்கு வரும்படி அவ்வதிகாரி சொன்னதால், அப்படியே தவறாமல் மறுநாட் காலை கூ-மணிக்கு அவ்விடம் போய்ச் சேர்ந்தோம். கக-மணிவரை காத்திருந்தும் அவ்வதிகாரி வாராதபடியால், அவரிருக்கும் கடற்றுறைக் காரியாலயத்துக்கு (கஸ்டம்ஹவுஸுக்கு) எல்லாரும் போய் அவரைக் கண்டு வற்புறுத்திக் கேட்டதன் மேல், அவர், "அங்கு வந்து தீர்வை போட முடியாது; அச் சாமான்களை யெல்லாம் உங்கள் உங்கள் செலவில் இங்குக் கொண்டு வந்தால் தீர்வை போடுகிறேன்" என்று சொல்லிவிட்டார். அதற்கும் உடன்பட்டுச் சாமான்களை யப்படியே கொண்டுவந்து சேர்த்தோம். அவர், "இப்படியே பார்க்க முடியாது; உள்ளே யிருக்கும் சாமான்களைப் பற்றிய விவரமான மனு (அப்ளிகேஷன்) எழுதிக் கொடுத்தால், பார்த்துத் தீர்வை போடுகிறோம்" என்றார். அதற்கும் உடன்பட்டு கூOஉ காலையில், மனு எழுதிக்கொடுத்துத் திறந்து பார்க்க அநுமதி வாங்கி, அதனை அவ்வதிகாரியிடம் செலுத்தி, அப்பால், தனித் தனியே ஒவ்வொரு சாமானையும் மதிப்பிட மணி மூன்றாய் விட்டபடியாலும், மறுநாள்சித்திரைமாதப்பிறப்பு காரியாலயமில்லையாகையாலும் சித்திரை உஉ பணம் செலுத்திப் பகல் மூன்று மணிக்குச் சாமான்களை நகர விடுதிக்குக் கொண்டுவந்த சேர்த்ததற்குள் நாங்கள் பட்டபாடு எழுதிமுடியாது. இத்தகை கஷ்டநாம் படாமற்போனால் எமது சாமான்களை மீண்டும் பெறுதற்கு எத்தனை நாட்களாயிருக்குமோ? இவைகளிலேற்பட்ட செலவுகளொவ்வொன்றையும் எழுதப்புகுந்தால், பத்திரிகை இடந்தாராது. இந்த ஐந்து நாட்களிலும் எத்தனையோ முறை எல்லாரும் கஸ்டம்ஹவுஸுக்கும் நகர விடுதிக்கும் போய்த்திரும்ப வேண்டியிருந்தது. சாமான்களை யெற்றியிறக்கிய—அவிழ்த்துக்கட்டிய வகையில் உண்டான நஷ்டமும் கஷ்டமும் வாடகையும் கூலியும் சொல்லி முடியாது கேட்டவர்கட்கெல்லாம் கொடுத்தழ வேண்டியவர்களாகவே இருந்தோம். அறந்தாங்கி வந்து சேருவதற்குள் ஒவ்வொருவர்க்கும் 'சண்டைக்காய்க் காற்பணம்; சமைக்கு முக்காற்பணம்' என்னும் பாடாகவே முடிந்தது. அவர்களைக் குறை கூறுவதில்யாதும் பயனில்லை. நாம் சாமான் கொண்டு வராவிட்டால், செலவுசெய்தபணங்களும் அலைச்சலும் மிகுதியும் லாபமாகவே இருந்திருக்கும். மலாய்நாட்டில் ரப்பர்விலை குறைந்திருந்ததால் இரண்டு வருஷங்களாக நாம் கஷ்டம் அடைந்திருக்கும் இக்காலத்தில் நமது பணம் இப்படிச் செலவாவதை நினைத்தால், ஒருவர் மனமும் சகிக்கவேமாட்டாது. சென்னையில் தங்கியிருந்தபோது விசாரித்துப்பார்த்ததில், மலாய் நாட்டிற் கிடைக்கக்கூடிய எல்லாச்சாமான்களும் மிகச்சரஸமான விலைக்கே கிடைக்கின்றன வென்று தெரிந்தோம். ஆகையால், மலாய் நாட்டிலுள்ள தனவைசிய சகோதரர்களே! பழைய வேஷ்டிகட்கும் தீர்வை போடு மிக்காலத்தில், இனிவருபவர்களாவது, சாமான்கள் வாங்கிக் கொண்டுவாராமல் திரும்புவது நலமென்று பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

இங்ஙனம் (ஒப்பம்)

ஆரு. பழ. சி. பழ. பழநியப்ப செட்டியார்
ராம. பழ. பழநியப் செட்டியார்
நா. வ. நாகப்ப செட்டியார்
மு. ராம. வ. வள்ளியப்ப செட்டியார்
பெரி. மு. ராம நடராஜன் செட்டியார்
நா. மு. வெ. பழனியப்ப செட்டியார்
அள. ராம. சி. மெ. சொக்கலிங்கஞ் செட்டியார்
பெரி. அழகப்ப செட்டியார்
ப. சி. ராம. காளியப்ப செட்டியார்

---

வீர. சொ. சொக்கலிங்கஞ் செட்டியார் பெண்சாதி யேகம்மை ஆச்சி யென்ற கலியாணி ஆச்சியெடுத்து போகவேண்டிய வழக்கமும் நியாயமும் நகா முறைப்படியிருக்க அவள் தமயனுர் கண்டவிராயம்பட்டி அரு. சுப. சுப்பிரமணியஞ் செட்டியா ரென்பவர்தான் தான்ஷெ சாமான்களை யெடுத்து போக வேணுமென்று வியவகாரஞ்செய்தும் கொடுக்கல் வாங்கல் தகரார் யேற்பட்டும், அப்பால் பஞ்சாயத்தார்கள் மூலமாய் கணக்குகள் பார்த்து அவர்களால் முடிவு செய்யப்பட்ட துகையை துந்துபி௵ மார்கழி௴ உoஉக்குள் யெனக்குத் தந்து யென் கலியாண காலத்தில் யென் மாமனு ரவர்களால் சீர்வைத்த சாமான்களையும் அவர்கள் கட்டிய கழுத்திரு யென்ற நகையும் யென்னிட மிருப்பதை அழிந்தவை போக பாக்கி உள்ளதுகளை யென் மைத்துனரை யெடுத்துக்கொண்டு போகும்படி தீர்மானித்தார்கள் அதுமுதல்யெனக்குத் தரவேண்டியதுகை அகப்படாமல் திரிந்தலைந்து அப்பால் துந்துபி௵ பங்குனி௴ உடுஉயில் பஞ்சாயத்து மூலம் கழுத்திருவை யென்னிடம் விலைவைத்து விட்டும் சில துகைகளை உண்டியல்கள மூலம் சாட்டுதல்செய்தும் சில துகைகளை ரொக்கமாகவும் பஞ்சாயத்தார் தீர்மானித்தபடி யெனக்குத் தரவேண்டியதைத் தந்து இருவரும் வேறு விதமான பின் துயற்சிகள் இல்லையென்று ரசீ தெழுதி முடித்துக்கொண்டு யென்வீட்டுக்கு வந்து அவர் தகப்பனுர் யென் கலியாண காலத்தில் சீர்வைத்த சாமான் ஜாப்பிதாவைக் காட்டி அதின்படி சாமான் வேணுமென்று கேட்டார் அதற்கு நானும் நம் மினத்தார்கள் சிலரும் அவ்விதம் கேழ்ப்பது நியாயமல்ல உடவருஷம் வாழ்ந்தவள் வீட்டில் சில சாமான்கள் அழிந்தும் உடைந்தும் இருக்குமல்லவா யென்று சொல்லியும் அவர் கேழ்க்கவில்லை அப்பால் நான் வியாகூல முற்றவனுய் (மட்டற்றவாழ்விருந்தென் மனைதனக்கு முக்கியமாம்—யிட்டதொரு பெண்சாதி—யென்பவளே முக்கியமாம்) யென்று பெரியோர்கள் வாக்கின்படி அவளே யிறந்துபோனுள் இந்தச் சாமானுல் யென்னலாப நஷ்டம் யென்றும குறையும் சாமான்களுக்கு நீங்கள் கேட்டவிலை தருவதாய் ஒப்புக்கொண்டு சாமான்களை ஒத்துப் பார்க்கும்படி சொன்னேன். அப்பால் அவர் ஜாப்பிதாப்படி சாமான்களை ஒத்துப்பார்த்ததில் அடுக்குகளில் ஒரு சட்டியாவது குறைய வில்லை. மற்றுள்ள குறையும் சில்லறைச் சாமான்களில் சில சாமான்களுக்கு விலை போட்டு ரூ. (௩எ) முப்பத்தியேழு கேட்டார். அதுபோல் ரசீது யெழுதி ஒரு அணுஸ்டாம்பு ஒட்டி அவரிடம் கையெழுத்து வாங்கிக்கொண்டு மேல்க்கண்ட ரூ (௩எ) முப்பத்தியேழும் அவர்கேட்டபடி ரொக்கமாய்க் கொடுத்துவிட்டேன் இன்னும் அவர்கள் ஜாப்பிதாவி லில்லாது பின்னீடு என் சம்சாரத்தால் பழைய சாமான்களை அழித்து புதிதாய் செய்த யென் வீட்டுப் பணத்தை கூலிகொடுத்து அவர்கள் பேர் வெட்டியிருந்த சிலசாமான்களையும், பேர் வெட்டாத சில சாமான்களையும் இன்னும் ஜாப்தாவிலில்லாத எனக்குச் சந்தேகப்பட்ட சில சாமான்களையும் எடுத்துக் கொடுத்தேன். அவைகளையும் தடையின்றி ஆனந்த சந்தோஷமாய் வாங்கிக் கொண்டு, போகிறவர் எங்கள் வீட்டில் அதிற்சில சாமான்கள் வைத்துவிட்டுப் போகிற வழக்கமும் பழக்கமும் அனுபோகங்களும் நம்மினத்தார்களில் உண்டென்று உலகத்தில் யாவர்களும் சொல்லிக் கொள்ளுகிறார்கள். அதுபோல் ஒன்றும் வையாது எல்லாவற்றையு வாங்கிக்கொண்டு என் மைத்துனனை மேற்கண்ட அரு. சுப சுப்பிரமணியஞ் செட்டியார் போயிருக்கிறுமென்னும் விபரத்தை இதின்மூலம் எனது குலத்துதித்த ஆண் பெண்கள் எல்லவருக்கும் தெரிவித்துக் கொள்வதுடன், இனிமேல் எங்காவது இவ்விதம் நடக்குங் காரியங்களில் முழுவதும் கூட்டி அள்ளாமலும், அப்படி அள்ளினுலும் வயிற்றெரிச்சலாகக்குறையும் சில சாமான்களுக்கு விலைபோட்டு ஸ்டாம்பு ஒட்டி ரசீது கொடுத்துப் பணம் வாங்காமலும், முன்வழக்கங்களையும் அனுசரித்து வீட்டில் எரித்த விளக்காவது வைத்து விட்டுப்போகும்படி சகல மானபேர்களையும் விரும்பி மிகுந்த வணக்கத்துடனும் தாழ்மையுடனும் யன்ருடிக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

பழ. ராம. பழ. பழனியப்பசெட்டியார்
நெற்குப்பை.









## கம்ப நாடர்.

இப்பெயர் புனைந்து, காரைக்குடியிலிருந்து ஒருமாதஸஞ்சிகை ஆடிமுதல் வெளியாகும். இது டிம்மி க-க்கு எட்டு கொண்ட சுஅ-பக்கங்களுடையது. இதில் "வான்மீகரும் கம்பரும்" "கம்ப ராமாயண ஆராய்ச்சி" "கம்பராமாயணம் சுத்தச் செய்யுட் பதிப்பு" "கம்பராமாயணம் திருத்தமான வசனப் பதிப்பு" என்னும் பகுதிகள் வெளியாகும். ஒவ்வொரு பகுதியும் முடிவில் தனித்தனி புஸ்தகமாக்கிக் கொள்ளக்கூடியபடி மாதந்தோறும் தொடர்ந்த பக்கங்களையுடையது. இதன் வருஷ சந்தா ரூ. [illegible]—o—o. வேண்டுவோர் முன்னதாகவே தங்கள் விலாசத்தைக் கொடுத்துப் பதிவு செய்தல்வேண்டும். முதல்ஸஞ்சிகை வி.பி.-யில் அனுப்பப்பெறும். முன் [illegible] பணமாகவும் அனுப்பிப் பெற்றுக் கொள்ளலாம்.

மோ. வே. கோவிந்தராஜையங்கார்,
[illegible]ம்பராமாயணப் பிரசாரகர், காரைக்குடி.

### சந்தா விபரம்.

இந்தியா முதலிய உள்நாடுகளுக்கு வருஷம் ஒன்றுக்கு ... ரு—0—0
சிங்கப்பூர் முதலிய வெளிநாடுகளுக்கு வருஷம் ஒன்றுக்கு க—0—0
தனிப்பிரதி ஒன்றுக்கு ... 0—உ—0

### விளம்பர விவரம்.

மாதம் க-க்குப்பத்தி க-க்கு... உ0—0—0
ஷை அரைப்பத்திக்கு... கக—0—0

காரியஸ்தர்,
தனவைசிய ஊழியன் ஆலயம்,
காரைக்குடி.




ராய. சொக்கலிங்கத்தால் காரைக்குடி தனவைசிய ஊழியன் அச்சியந்திரசாலையில் அச்சிட்டுப் பிரசுரஞ்செய்யப்பெற்றது.

